# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2003
பரிதாபி ஆடி
1972 ஜூலை



அமெரிக்காவிற்கு அனுப்பியுள்ள வெள்ளெருக்கு விநாயகர்

கணேசன்

## தமிழ் நாடு தெய்விகப் பேரவை

சென்னை-18

உ

"அருளோசை" இதழுக்கு நல்வாழ்த்துக்கள்



அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண்
எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே.

—திருவாசகம்.








எண்
(திங்கள் இதழ்)



ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| மணி 1 | பரிதாபி ஆடி<br>1972 ஜூலை | ஓசை 1 |
|---|---|---|

## அறிமுகம்

தமிழ் நாடு தெய்விகப் பேரவை அஞ்சல் வழி சமயக்கல்வி போதனை செய்வதற்காக 'அருளோசை' என்ற இத்திங்களிதழை வெளியிடுகிறது. தவத்திரு குன்றக்குடி அடிகளார், அறநிலைய ஆணையர் திரு கே. எஸ். நரசிம்மன், பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் முதலிய பேரறிஞர்கள் தொடர்ந்து கட்டுரை எழுதுகிறார்கள். திருக்கோயில் வரலாறு, அடியார் வரலாறு, மேலை-கீழை நாட்டுத்தத்துவ விளக்கங்கள், திருவுருவ உண்மைகள் முதலிய அரிய கட்டுரைகள் வெளிவரும். இதில் வரும் 'திருவளர் செல்வனுக்கு' என்ற திருமுகப்பகுதியும், வினாவிடைப் பகுதியும் தனிச் சிறப்புடையன வாகும். அன்பர்கள் சந்தாதாரர்களாகச் சேர்ந்து இதழ்களைப் பெற்றுப் பயன் பெறுவார்களாக.

அ. நாராயணசுவாமி, பி. ஏ.,
பதிப்பாசிரியர்,

## இந்த இதழில்



ஆண்டுச்சந்தா ரூபா மூன்று



உ

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்,
குன்றக்குடி.

15—6—1972.

## வாழ்த்துரை



செவியிற்படும் ஓசை, சிந்தனையைத் தூண்டு கிறது. உலகத்தை இயக்குவது ஒலி. ஒழுங் கமைப்பது ஒலி. ஒலியின் முதல், ஓசை! ஓசை அருளோசையாக இருக்குமானல் செவி குளிரும், சிந்தை குளிரும். கேளுங்கள்! ஓசை ஒலியெ லாம் ஆன இறைவனை வாழ்த்துவோம்! வாழ்த்தி வாழ்வோம்!

குன்றக்குடி அடிகளார்






**நல்வாழ்த்துக்கள் !**

கல்லூரிகள் திறக்கப்பெற்று விட்டன; உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்பெற்று விட்டன. நீ, படிப்பார்வத்தில் சிறந்து விளங்குவாய்! வாழ்க்கையில் இரண்டு வகைக் கடமைகள் உண்டு. ஒன்று, அன்றாடக் கடமைகள். பிறிதொன்று, நெடிய காலத்திற்குத் தொடர்ந்து வரும் பணிகள். எவ்வளவுதான் அன்றாடக் கடமைகள் மிகுதியாக இருந்தாலும், நெடிய வாழ்க்கையின் பணியை மறந்துவிட முடியுமா? வாழ்க்கையின் ஆக்கம் வரலாற்றோடு பிணைக்கப்படுவதில்லையா? உயிர்க்கு உறுதி சேர்ப்பதுதானே, கல்வி முயற்சி, கேள்வி முயற்சி, வாழ்வியல் முயற்சி! இவையனைத்திலும் குறைகள் நிகழா வண்ணம் காத்து, நிறைநலம் நோக்கி நம்மை உந்திச் செலுத்துவது சமயநெறி. அதுபற்றி நீ நிறையக் கேட்டிருப்பாய். ஆனாலும், தெளிவாகச் சிந்திக்க உனக்கு வாய்ப்பு ஏற்பட்டதோ இல்லையோ? நம் ஒவ்வொருவருடைய உடைமைகள் நிலமும் வீடும் மட்டுமா? வழிவழி வளர்ந்து வந்துள்ள பண்புகள் நமது உடைமையல்லவா? அவற்றைப் பேணிக் காப்பது உனது கடமையல்லவா? அந்த வகையில் உன்னோடு கலந்து சிந்திக்க இந்தக்கடிதம் பயன்படும் என்று கருதுகின்றோம். கடிதத்தைக் கவனமாகப்படி! ஐயமிருந்தால் எழுது! 'ஐயத்தின் நீங்கித் தெளிதல்' வளர்ச்சியின் முதற்படி என்பது வள்ளுவம்.

உனக்கு இயல்பிற் சில பெருமைகள் உண்டு. அது நீ தேடியவையல்ல. உன்னுடைய முன்னோர் தேடியவை. அது

தான் உயர்ந்த கொள்கையினையுடைய சமய நெறியில் நீ பிறந்திருப்பது. உனது சமயம், இந்து சமயம். இந்து சமயம், என்று தோன்றியது? எப்பொழுது தோன்றியது? யரால் தோற்றுவிக்கப் பெற்றது? என்று கணக்கிட்டுக் கூற முடியாதகாலப் பழமையுடையது. அது மட்டுமா? பாரதநாடு அளவில் ஒரு பெரிய நாடு. அதுமட்டுமா? பாரதத்தில் பலமொழி பேசுகிறவர்கள் வாழ்கிருர்கள். பல்வேறு பெயரில் பரம் பொருளை வழிபடுவோர்கள் வாழ்கிருர்கள். வேறுவேறு பழக்க வழக்கங்களை உடையவர்கள் வாழ்கிருர்கள். ஆனலும் இந்து சமயம் என்ற ஓர் அடிச்சரட்டில் பாரத நாட்டு மக்கள் இணைக்கப்பட்டிருக்கிருர்கள்—பிணைக்கப்பட்டிருக்கிருர்கள். இந்த அற்புத சாதனையை உலகத்தில் வேறு எந்தச் சமயமும் செய்யவில்லை என்பதை நீ அறிந்து மகிழலாம்—பெருமை கொள்ளலாம்.

இந்து சமயம் பொதுமையானது. ‘மலர்’ என்பது பொதுப் பெயர். ‘தாமரைப்பூ’ என்பது சிறப்புப் பெயர். ‘விலங்கு’ என்பது பொதுப் பெயர். ‘பசு’ என்பது சிறப்புப் பெயர். அதுபோல இந்து சமயம் என்பது பாரத நாட்டு மக்களின் வாழ்க்கையில் விளங்குகின்ற ஒரு பொதுமைப் பண்பு. ஆனல், இந்து சமயத்தை அதனுடைய துணை அமைப்புக்களாகிய சமய நெறிகளின் பேரால்தான் விளக்க முடியும். உதாரணமாக சைவம், வைணவம், சாருவாகம் முதலிய சமய நெறிகள். சிவநெறி மிகத் தொன்மை வாய்ந்தது. அதுமட்டுமல்ல, மெய்ப்பொருளியலை விளக்குவதில் மேம்பட்டுநிற்கும் சமயம் ஏன்? இந்து சமயத்தின் பேரால் விளக்கமுற்று விளங்கும் சில கொள்கைகள் கூடச் சிவநெறியைச் சார்ந்ததே! நீ, டாக்டர் ஜி. யூ. போப் என்ற ஒரு மேலை நாட்டு அறிஞர் பெயரைக் கேள்விப்பட்டிருப்பாய்! திருக்குறள், திருவாசகம் ஆகிய தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து உலகத்தவர் படிக்கும்படி செய்தவர். அவர், திருவாசக மொழி பெயர்ப்பின் முன்னுரையில் தமிழர்களின் அறிவில்—சிந்தனையில் தோன்றிய நெறி சிவநெறி என்றும், அதுவே இந்தியச் சமய நெறிகளுக்குத் தாய்மை நிலையில் அமைந்தது என்றும் இணைத்துக் கூறியுள்ளார். இத்தகைய சிவநெறியில் நீ, பிறந்து வளர்கிருய் என்பது பெருமைக்குரிய

செய்தியல்லவா? "சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது" என்று சித்தியார் என்ற நூல் கூறுகிறது. அப்படி என்ன சிவநெறியில் சிறப்பு? என்று உனக்குக் கேட்கத் தோன்றும். தமிழகத்திற்கு ஒரு முறையான-முழுமையான வரலாறு இல்லாதது ஒரு பெரியகுறை. சாதாரணமாகத் தமிழ்ச் சமுதாயத்திற்கே வரலாறு இல்லாதபொழுது எப்படி தத்துவ வளர்ச்சிக்கு ஒரு வரலாறு தோன்றமுடியும்? நீ, சிந்து வெளி நாகரித்தைப் பற்றி சர். ஜான் மார்ஷல் எழுதியவரலாற்றைப் படித்திருப்பாய் என்று நம்புகின்ருேம். சிந்துவெளி புதை பொருள்களை ஆய்வு செய்த அந்த அறிஞர் ஐயத்திற்கிடமின்றிச் சிந்துவெளி நாகரிகம், தமிழ் நாகரிகம், என்றும் அது இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது என்றும் எடுத்துக்கூறியுள்ளார். அந்தச் சிந்துவெளி நாகரிக காலத்திலேயே சிவவணக்கம் இருந்ததை அவர் எடுத்துக்காட்டியுள்ளார். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கருக்கொண்ட தமிழகத்தின் தத்துவ நெறி முறையாக வளர்ந்து இன்று செழுமை பெற்று விளங்குகிறது. உனக்குத் தெரியும், இந்த நூற்ருண்டில் சமய நெறியியலுக்கு அறைகூவல்கள் எத்தனை? எத்தனை என்று. நீ, உலகாயதம் என்ற ஒரு கொள்கையைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிருயா? பழங்காலத்திலேயே தோன்றிய அந்த உலகாயதம் அனுபவத்தின்பாற் பட்டதே யன்றி அறிவின்பாற் பட்டதன்று. அதாவது, காணப்படும் உலகமே உண்மை. இங்கே அனுபவிக்கும் இன்பமே இன்பம். இதையன்றி வேருென்றும் இல்லையென்பது உலகாயதம். நம்முடைய வீடுகளில் சில சமயங்களில் பெரியவர்கள், 'என்னப்பா! கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று நிற்கிருயே! இது நியாயமா?' என்று கேட்பார்கள். இஃது ஒரு பொருள் பொதிந்த தத்துவப் பழமொழி—தத்துவ இயல் வினு. அதுபற்றி உனக்கு அடுத்த கடிதத்தில் எழுதுகிருேம்.

இன்ற்க் ஆசிகள்

# இறைவணக்கம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தனித்திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஒரு ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய் நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம் முத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.

[பொழிப்புரை] விடையை ஊர்தியாகவுடைய சிவபெருமானே, நீ உலகுக்கெல்லாம் அன்புடைய தந்தையாகவும், அன்னையாகவும். தமையனுகவும், மாமன் மாமியாகவும், ஒத்தமனைவியாகவும், சிறந்த குலத்தவராகவும், சுற்றத்தாராகவும், ஊரில் உள்ள சான்ருேராகவும், உண்பனவற்றையும், நுகர்வனவற்றையும் ஆக்குவோனுகவும், எனக்குத் துணையாக நின்று என் உள்ளத்தின் கண்ணே உள்ள பற்றினைவிடுமாறு செய்தவனுகவும், காணப்படும் பொன்னும் மணியும் முத்துக்களாகவும் எல்லா வற்றிற்கும் இறைவனுகவும் இருக்கின்ருய்.

[விளக்கம்] தனித்திருத்தாண்டகம் என்பது தனித்தனிப்பொருளை உணர்த்தும் திருத்தாண்டகங்களால் இயன்ற திருப்பதிகம் என்று பொருள்படும். இது, தொல்காப்பியச் செய்யுளியலின்படி எண்சீரான் வந்த கொச்சக ஒருபோகு எனப்படும். இருபது எழுத்து என்னும் வரையறையைத் தாண்டி அவற்றிற்கு மேற்பட்ட எழுத்துக்கள் மிக்கு வருதலின் தாண்டகம் என்ற பெயர்த்தாயிற்று.

திருநாவுக்கரசுசுவாமிகள் இறைவனை முன்னிலைப்படுத்தி, அவன் தமக்கு எல்லாப் பொருளுமாக இருக்கின்ற தன்மையை இத்திருப்பாட்டில் விதந்து பேசுகிருர். உலகவாழ்க்கையில் செம்மையுற நின்று வாழ்வாங்கு வாழும் ஒருவர்க்கு எவையெல்லாம் சிறப்புடைய பொருளாகத் தோன்றுமோ அப்பொருள்களாக இறைவன் விளங்குகின்ருன் என்பது இதில் கூறப்பட்டுள்ளது. குழந்தைப் பருவத்தில் குழந்தையைச் சீராட்டி வளர்ப்பவள் அன்னையேயாகும். அவ்வாறு வளர்ப்பதற்கு உறுதுணையாக நிற்பவன் தந்தையேயாகலான் 'அப்பனே' என்று முதற்கண் கூறப்பட்டது. பின்னர் பிள்ளைப் பருவத்தில் தந்தைக்கும் அன்னைக்கும் அடுத்தபடியாக உதவுகின்றவன் தமையன் ஆவான். எனவே 'ஐயனும் நீ' என்று கூறப்பட்டது. அதற்குப் பின்னரும் ஒருவருக்கு அவர்தம் மாமனும் மாமியும் அன்புடையராய் அவருடைய நலங்களைப் பேணிவருவதை உலகியலில் நாம் காண்கின்ருேம். தலைவன் தலைவியர் ஒத்த குணனும், நலனும், கல்வியும், திருவும், உருவும் உடையவராக

இருப்பின் இல்வாழ்க்கை சிறப்புற அமையுமாகலான், 'ஒப்புடைய மாதரும்' என்று கூறப்பட்டது. ஒப்புடைய மனைவியை எய்துதல் முன்னைய புண்ணியத்தாலன்றிக் கூடாமையின், அவ்வாறு எய்திய மனைவி என்பது தோன்ற 'மாதர்' எனப் பன்மையால் கூறப்பட்டது. வாழ்க்கைத் துணையோடு இல்லறம் நடத்துதற்கு அறநெறியால் ஈட்டிய பொருள் இன்றியமையாததாகலான் 'ஒண் பொருள்' எனப்பட்டது 'நடுவணது எய்த இருதலையும் எய்தும்' என்றார் பிறரும். பொருளிருந்தாலன்றி அறஞ் செய்தலும் இன்பம் நுகர்தலும் ஒருவர்க்குக் கூடாவாம். "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு" என்பது பொது மறை. 'ஒரு குலம்' என்பது சிறந்த குடியைக் குறிக்கும். குலம் என்பது ஆகு பெயரால் குலத்தவர் என்று பொருள் தரும். ஒழுக்கமுடைமை குடிமையாகலான் குலத்தவர் என்றது சீலம் மிக்க பெருமக்களைச் சுட்டி நின்றது. 'குடிமுழுதாண்டு' என்பது மணிவாசகம். அன்புடைய சுற்றத்தாரோடு சூழ்ந்து வாழ்தல் சிறந்த பேருகக் கருதப்படுதலின் 'சுற்றமும்' என்று கூறப்பட்டது.

'ஓர் ஊர்' என்றது ஆகுபெயரால் ஊரில் வாழும் சான்றோரைக் குறிக்கும். முதுமைப்பருவத்திலும், நரைதிரையின்றி இனிய வாழ்க்கை நடாத்திய பிசிராந்தையார் என்னும் புலவர் "சான்றோர் பலர் யான் வாழும் ஊரே" என்றார். உணவுப்பொருள்களும் ஏனைய நுகர்ச்சிப் பொருள்களும் இனியவாழ்க்கையை நடத்துவதற்கு வேண்டப்படுவன வாகையால் துய்ப்பனவற்றையும், உய்ப்பனவற்றையும் அமைத்துத் தருபவனாக இறைவன் உள்ளான் என்று கூறப்பட்டது, அவ்வாறே உலகில் சிறந்த பொருளாகக் கருதப்படும் பொன்னும் மணியும், முத்தும் எல்லாமுமாக இறைவன் உள்ளான் என்றும் கூறப்பட்டது. திருப்புகலூரில் உழவாரத் தொண்டு செய்யும் போது புல், கல் முதலியவற்றுடன் பொன்னும் மணியும் கலந்து தோன்றியவற்றை 'இப்பொன் நீ இம்மணி நீ' என்று அடிகளார் முன்னிலைப் படுத்திக் கூறியிருக்கலாம் என்றும் சிலர் கருதுவர்.

உலகப் பொருள்களாகிய இவற்றையெல்லாம் பெற்று வாழ்க்கைச் சிறப்பு எய்தப் பெறுமாயினும் அத்தகைய வாழ்க்கையில் அழுந்தா வண்ணம் அடிகளார்க்கு உள்ளத்துறவை இறைவன் துணையாக நின்று அளித்தருளினன் ஆகலான் "துணையாக என்னெஞ்சம் துறப்பிப்பாய்" என்றார் அவனருளே கண்ணாகக் காண வேண்டுமாகையால் 'துணையாய்' என்று கூறப்பட்டது. அடிகளாரை மேற்கதிக்கு உய்ப்பவன் இறைவன் என்பது தோன்ற 'ஏறூர்ந்த செல்வன்' என்று கூறப்பட்டது. அறவடிவாகிய காளையை இறைவன் ஊர்தியாகப் பெற்றுள்ளானாதலின் இறைநெறி அறத்தை அடிப்படையாகக் கொண்டது என்பது போதரும். எல்லாப் பொருள்களுள்ளும் தானேயாயும் அவையேயாயும், உடனாயும் தங்கியிருப்பவனாகலின் 'இறைவன்' என்றும் அவனே 'அப்பன்' முதலிய எல்லாமாக இருக்கிறான் என்பதும் குறிப்பாகக் கொள்ளப் படும்.

[வித்துவான் நா. குருசாமி]




## திருமயிலைக் கபாலீச்சரம்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ,எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

முன்னுரை :

தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் சார்பில், அஞ்சல்வழிச் சமய போதனை அளிக்கும் நோக்கத்துடன், தொடங்கப் பெறுகின்ற "அருளோசை" என்னும் இதழில் நம் தமிழகத்திலுள்ள கோயில்களுள், ஒவ்வொரு இதழிலும் ஒவ்வொரு கோயிலைப்பற்றிச் சுருக்கமாக ஒரு கட்டுரை எழுத விழைந்து இந்த முதல் இதழில், நம் சென்னை நகரிலுள்ள திருமயிலைக் கபாலீசுவரர் கோயிலைப் பற்றிய வரலாற்றினை இங்குச் சுருக்கமாக எழுத முற்படுகின்றேன்.

இப்போது சென்னை நகரம் என வழங்கும் பகுதி, சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர்தான் (கி.பி. 1639), இப்பெயர் பெற்று வளரத் தொடங்கியது. என்றாலும், இப்போது சென்னை நகரின் உட்பகுதியில் ஒன்றாக விளங்கிவரும் திருமயிலை திருவல்லிக்கேணி திருவொற்றியூர் திருவான்மியூர் முதலிய தலங்கள், 1300 ஆண்டுகளுக்கு முன்னரே மிகவும் புகழ் பெற்றிருந்தனவாகும்.

பழமையும், பெருமையும் :

தொண்டை நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களுள் ஒன்றாய், மிகவும் புகழ்பெற்றுச் சென்னை நகர்க்கண் திகழ்ந்து வருவது திருமயிலை. புகழ்மிக்க தாலமி என்னும் பண்டைக் கிரேக்க அறிஞர் (கி.பி. 140), இதனை மயிலார்பா எனக் குறித்துள்ளார்.

உலகமே உவந்து போற்றும் திருக்குறள் இயற்றிய திருவள்ளுவப் பெருந்தகையார், முதலாழ்வார்களுள் ஒருவராகிய பேயாழ்வார், அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான வாயிலார் நாயனார் முதலிய சான்றோர்களின் திருவவதாரத் தலமும் இதுவே. இங்கு சமண சமயத்தைச் சார்ந்த நேமிநாதர் என்னும் தீர்த்தங்கரரின் கோயிலும்

இருந்ததாகத் தெரிகின்றது. 'நன்னூல்' என்னும் சிறந்த தமிழ் இலக்கண நூலுக்கு உரை எழுதிய மயிலைநாதர் என்பவர் இங்குத் தோன்றியவர் எனக் கூறப்படுகின்றார். 1300 ஆண்டுகட்கு முன்பு கி.பி. 7–ஆம் நூற்றாண்டில், திருஞானசம்பந்தர் காலத்திலேயே, இத்தலம் மிகவும் சிறப்புற்று, மாடமாளிகைகள் நிறைந்ததாகவும், மலிவிழா வீதிகளைக் கொண்டதாகவும் விளங்கியிருந்தது.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இது பல்வேறு நாட்டுமக்கள் ('நானாதேசிகள்') கூடும் ஒரு பெருந்துறைமுகமாக விளங்கியிருந்தது. தெள்ளாறெறிந்த நந்திவர்மன் கி.பி. 825-850) மீது பாடப்பெற்ற நந்திக் கலம்பகம் என்னும் நூலில், "மல்லை வேந்தன், மயிலை காவலன், பல்லவர் தோன்றல், பைந்தார் நந்தி" எனவரும் பகுதியில் இவ்வூர் குறிப்பிடப்பெற்றுள்ளது.

"திருமயிலாப்பூர் புகழ்மிக்கதொண்டை நாட்டைச் சேர்ந்தது; வளம் நிறைந்தது; பல பெருங் குடிமக்கள் நிறைந்து வாழ்வது; தொன்று தொட்டு செல்வம் செழித்துத் திகழ்வது" என்னும் கருத்தமைய,

"சொல் விளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்லல் நீடிய வாய்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வம் மல்கு திருமயி லாபுரி"

என்று, இற்றைக்கு 800 ஆண்டுகளுக்கு முன்பு விளங்கியிருந்த சேக்கிழாரடிகள், பெரியபுராணத்தில் புகழ்ந்து போற்றிப் பாடியிருக்கின்றார்.

தலவரலாறுகள் :

திருக்கயிலாயத்தில் முன்பொரு சமயம் சிவபெருமான் உமாதேவிக்குத் திருவைந்தெழுத்து மந்திரத்தின் சிறப்பும் பொருளும் பற்றி உபதேசித்துக் கொண்டிருந்தார். அப்போது அம்பிகை அருகே தோகையை விரித்து ஆடிக்கொண்டிருந்த மயிலின் அழகில் ஈடுபட்டு அதிற் சிறிது கவனம் செலுத்தினார். உயர்ந்த மெய்ப்பொருளை உபதேசிக்குங்கால், அதிற் கருத்துச் செலுத்தாமற் புறக்கணித்து, மயிலை நோக்கிக் கொண்டிருந்த காரணத்தால், உமாதேவியை அம்மயில் வடிவமே அடையும்படி பணித்தருளினார். பிழையுணர்ந்து வருந்திய அம்பிகை, தான் எய்திய மயில் வடிவத்துடன் இங்கு வந்து இறைவனை வழிபட்ட காரணத்தால், இத்தலத்திற்கு மயிலை என்றும், மயிலாப்பூர் என்றும் பெயர்கள் வழங்கலாயின.

இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவனின் பெயர் கபாலீசுவரர் என்பது. ஒரு காலத்தில் செருக்குற்றிருந்த பிரமதேவனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளிக் களைந்து, பிரமதேவனின் தலையாகிய கபாலத்தைத் தம் திருக்கரத்தில் ஏந்தியவராதலின், இவருக்குக் கபாலீசுவரர் எனப் பெயர் வந்தது.

தன்னை அன்புடன் வழிபடும் அடியவர்களுக்கெல்லாம், தேவர் உலகத்திலுள்ள கற்பக மரம்போல, அன்பர்கள் நினைத்தனவற்றை யெல்லாம் அளித்தருளும் சிறப்பினளாக அம்பிகை இங்குத் திகழ்தலின், கற்பகாம்பாள் எனப் போற்றி வணங்கப்பட்டு வருகின்றாள். இக்கோயிலுக்குரிய தலமரம் புன்னை. 'மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை' என்பது தேவாரம். இப் புன்னைமரத்தின் கீழ், அம்பிகை இறைவனை மயில்வடிவிற் பூசிக்கும் முறையில் சந்நிதி அமைந்து திகழ்தல் காணலாம். மற்றும் இக்கோயிலில் உள்ள கூத்தாடும் பிள்ளையார், சிங்கார வேலர், வாயிலார் நாயனார், அங்கம்பூம்பாவை ஆகியோர் சந்நிதிகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை; தரிசித்து மகிழத் தக்கவை. பெரும்பாலான கோயில்கள் கிழக்கு நோக்கியிருக்கும். ஆனால், இக்கோயில் மேற்கு நோக்கிய சந்நிதியாகத் திகழ்கின்றது. இது ஒரு தனிச் சிறப்பாகும்.

திருமயிலையிலேயே மாதவப் பெருமாள் கோயில், ஆதிகேசவப்பெருமாள் கோயில், திருவள்ளுவர் கோயில், வெள்ளீசுவரர் கோயில், வாலீசுவரர் கோயில், விருபாட்சீசுவரர் கோயில், முண்டகக்கண்ணியம்மன் கோயில் முதலிய வேறுபல கோயில்களும் சிறப்புற அமைந்து விளங்கி வருகின்றன.

அங்கம்பூம்பாவை :

சிவநேசச் செட்டியார் என்னும் செல்வர் ஒருவர், இங்கு 1300 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்து வந்தார். அவருக்குப் பூம்பாவை என்ற பெண் ஒருத்தி இருந்தாள். நந்தவனத்திற்குப் பூப்பறிக்கச் சென்ற போது அவள் பாம்பு கடித்து இறந்தாள். எரிக்கப்பெற்ற அவளது உடலின் எலும்புகளைச் சிவநேசச் செட்டியார் ஒரு குடத்திலிட்டுச் சேமித்து வைத்திருந்தார். காஞ்சிபுரம், திருக்காளத்தி, திருவாலங்காடு முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவொற்றியூரை வழிபட வந்திருந்த ஞானசம்பந்தரின் பெருமைகளைச் சிவநேசச் செட்டியார் கேள்வியுற்றார். அவரைத் திருவொற்றியூரிலிருந்து வரவேற்று, திருமயிலைக்கு அழைத்து வந்தார். தமது அருமை மகள் பூம்பாவை பாம்பு கடித்து இறந்துபோன செய்தியைக் கூறி, அவளது எலும்புகள் சேமித்து வைக்கப்பெற்றிருந்த குடத்தையும் திருஞானசம்பந்தருக்குக் காட்டினார். சம்பந்தர் பெரிதும் திருவுள்ளம் இரங்கி, அவ் என்புக் குடத்தைக் கபாலீசுவரர் கோயிலின் முன் கொணர்ந்து வைக்கச் செய்து,

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் கபாலீச் சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்

எனத் தொடங்கும் திருப்பதிகம் அருளிச் செய்தார். அதன் பயனாகக் கபாலீசுவரர் திருவருளால், இறந்துபோன பூம்பாவை அழகிய அருள் வடிவம் பெற்று, உயிர்த்து எழுந்தாள். இது இத்தலத்தில் நிகழ்ந்த

அற்புத அருள் நிகழ்ச்சியாகும். திருஞானசம்பந்தர் பாடல்பெற்றதனுலும், அங்கம் பூம்பாவையாக உயிர்பெற்று எழுந்த அருள் நிகழ்ச்சியினுலும், திருமயிலைக் கபாலீசுவரர் கோயில், தெய்விகச் சிறப்பு மிக்க பெருந்தலமாக தொன்றுதொட்டுப் போற்றப்பெற்று வருகின்றது.

திருவிழாக்கள் :

பண்டைக் காலத்தில் இக்கோயிலில் ஐப்பசி ஓணவிழா, கார்த்திகை விளக்கீட்டு விழா, மார்கழித் திருவாதிரைவிழா, தைப்பூசப்பெருவிழா மாசிமகக் கடலாட்டு விழா, பங்குனி உத்திரப் பெருவிழா, சித்திரை அட்டமிவிழா, வைகாசியில் ஊசல் விழா, ஆனியில் பெருஞ்சாந்திவிழா முதலிய பற்பல விழாக்கள் நிகழ்ந்து வந்த சிறப்பும் செய்தியும், திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத் திருப்பதிகத்தால் செவ்விதின் விளங்குகின்றன. இன்று தமிழகத்தில் நிகழும் விழாக்களில், திரு மயிலையில் நிகழும் "அறுபத்துமூவர் விழா" பெரும்புகழ் பெற்று விளங்கி வருகின்றது. "மங்குல் மதிதவழும் மாடவீதி மயிலாப்பில் உள்ளார்" எனத் திருநாவுக்கரசர் பாடியதற்கேற்ப இத்தலத்தில், மாடவீதிகள் மிகவும் அழகுற அமைந்திருக்கின்றன. மிகப் பழங்காலத்திலேயே, திருவல்லிக்கேணி என்னும் பகுதியானது. திருமயிலாப்பூரின் ஓர் உட்பிரிவாகவே இருந்து வந்தது. அதனுலேயே "மாடமாமயிலை திருவல்லிக்கேணி கண்டேனே" என்று திருமங்கையாழ்வார் குறிப்பிட்டருளியுள்ளார்.

புதிய கோயில் :

திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடிய திருமயிலைத் திருக்கபாலீச்சரம் என்னும் பழம்பெருங்கோயில், இப்போது 'சாந்தோம்' என வழங்கும் இடத்தில் கடற்கரைக்கு மிகவும் அருகில் அமைந்திருந்தது. அதனைப் பதினைந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்திருந்த அருணகிரிநாதர், திருப்புகழ் பாடிப் போற்றியுள்ளார். ஆனுல் அது 16-ஆம் நூற்ருண்டில் சாந்தோமில் குடியேறிய போர்த்துக்கேசியர்களால் இடிக்கப்பட்டும். கடல் வெள்ளப்பெருக்கால் சிதைக்கப்பட்டும் அழிந்து போனதாகத் தெரிகின்றது. பின்னர்த் தற்போதுள்ள கபாலீச்சரம் என்னும் கோயில் இற்றைக்குச் சுமார் 350 ஆண்டுகளுக்கு முன்னர், மயிலை நாட்டு முத்தையப்ப முதலியார் என்பவரால் கட்டப்பெற்றதாகத் தெரிகின்றது. அதனுலேயே, இக்கோயிலில் பழைய சிற்பக் கலைநலங்களோ, அரிய கல்வெட்டுச் செய்திகளோ காணப்படவில்லை.

முடிவுரை :

அறுபத்துமூவர் எனப்படும் நாயன்மார்களுள் ஒருவரான ஐயடிகள் காடவர் கோன் என்னும் பல்லவப் பேரரசர், பதினொன்ரும் திருமுறையில் தாம் பாடிய சிவத்தல வெண்பா என்னும் நூலில்,

குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல்
பயிலப் புகாமுன்னம் நெஞ்சே -மயிலைத்
திருப்புன்னை யங்கானல் சிந்தியாய் ஆகில்
இருப்பின்னை அங்காந் திளைத்து

என்று, இத்தலத்தினைத் துதித்துப் பாடியுள்ளார்.

"நெஞ்சமே! குயிலைப் போன்று கறுத்த தலைமயிரானது, கொக்கைப் போன்று வெண்மை நிறம் உடையதாய் நரைத்து, முதுமைப் பருவம் மேலிட்டு, இருமல் நோய் பற்றிக்கொள்ளத் தொடங்குவதற்கு முன்னரே, மயிலாப்பூரில் அழகிய கடற்கரையின் புன்னை மரச்சோலையில் எழுந்தருளியுள்ள கபாலீச்சரப் பெருமானை, நீ சிந்தித்து வணங்கிக் கொள். இல்லையேல், நீ பிறகு வாய்திறந்து வருந்தி இளைத்துத் துன்புற்று இறக்க நேரிடும்" என்பது இப்பாடலின் பொருள்.

ஆதலின், நாமும் இப்போதே கற்பகாம்பாள் உடனுறை கபாலீச்சரப் பெருமானை அன்புடன் வணங்கித் துதித்து, நலம் பெறுவோமாக.




## விநாயகர் மாட்சி

திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ. எம்.ஓ.எல்.

முன்னுரை :

நம் இந்திய நாட்டிலும்-இந்து மதத்திலும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும் தெய்வங்களுள் விநாயகரும் ஒருவர் ஆவர். விநாயகர் கோயில் இல்லாத ஊர் ஒன்றுகூட நம் தமிழ்நாட்டில் இருத்தல் அரிது. பட்டி தொட்டிகள் ஆகிய எல்லா ஊர்களிலும், மூலே முடுக்கர்களிலும், சாலே சந்திகளிலும், ஆற்றங்கரைகளிலும், குளக்கரைகளிலும், ஆலமரத்தடி களிலும் அரசமரத்தடிகளிலும், விநாயகப் பெருமான் எழுந்தருளி விளங் குதல் காணலாம். அத்துணையளவுக்கு மக்களாற் பெரிதும் விரும்பித் தொழப் பெறுபவரும், எங்கும் எவர்க்கும் எளிவந்தருளும் இயல்பினரு மாகத் திகழ்பவர் விநாயகப் பெருமான்; தலேவர்களுக்கெல்லாம் மேலான தலேவர் விநாயகர். தாமே மேலான தலேவராதலின், தமக்கு ஒரு தலேவரும் இல்லாதவர் விநாயகர்.

பழமையும் பெருமையும்

விநாயகர் வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்தது. நம் இந்திய நாட்டில் மட்டுமேயன்றி, இந்தியக் கலாசாரம் பரவியுள்ள ஜாவா, பாலி, சுமத்திரா, போர்னியோ, பிலிப்பைன்ஸ். கம்போடியா, சாம்பா, அன்னும், சயாம், மலேயா, பர்மா, சிலோன் போன்ற ஏனேய பிற அயல் நாடு களிலுங்கூட, விநாயகர் வழிபாடு பரவியிருக்கிறது.

பிரணவம் :

எல்லாப் பொருள்களுக்கும், எல்லா உயிர்களுக்கும் முதலாய் நிற்கும் எல்லாம் வல்ல இறைவனே வழிபடும் முறைகளேக் கண்டுணர்ந்த நம் பண்டைப் பெரு முன்னேர்கள், இறைவனே வழிபடுவதற்குரிய மந்திரங் களுள் ஒன்ருகவும், தலே சிறந்ததாகவும், ஓங்காரம் என்பதனேக் கண்டறிந்தனர். எல்லா எழுத்தின் ஓசைகட்கும் முதலாய் இயல்பாகத் தோன்றி, ஓவாது ஒலி செய்து கொண்டிருக்கும் 'ஓ' என்னும் ஒலியே ஓகாரம் அல்லது ஓங்காரம் எனப்படும். இவ்வியற்கை முதலோசை வட மொழியிற் 'ப்ரணவம்' என்று வழங்கப்படுகின்றது. 'ப்ரண' என்னும்

சொல் 'பழைய' என்னும் பொருளைத் தரும். எனவே, 'ஓ' என்னும் ஓங்கார ஓசை, ஏனை எல்லா ஓசைகட்கும் முற்பட்டதாய், இயற்கையே தோன்றி இயங்கும் பழைமையுடையதாதல் பற்றி, 'பிரணவம்' எனப் பெயர் பெற்றது.

முத்தொழில் :

பிரணவம் எனப்படும் ஓங்கார ஒலியைப் பிரித்துக் காண முற்படின், அஃது அ, உ, ம் என்னும் மூன்று ஒலிகளாய்ப் பிரியும். இவற்றுள் அகார ஒலி எல்லாச் செயற்கை ஒலிகட்கும் முதற் பிரிந்து படைத் தற்றொழிலைப் புரியும்; உகார ஒலி அதன் பின்னர்த் தோன்றிச் சிறிது நேரம் நிற்பதாகலின், அதுபடைக்கப்பட்ட பொருள்களைத் தத்தம் கால எல்லையளவு நிலைநிற்கச் செய்தலாகிய காத்தற்றொழிலைப் புரியும்; மகார ஒலி உதடுகள் இரண்டும் சேர்ந்து முடிவதாகலின், அஃது அங்ஙனம் நிலை பெற்ற பொருள்களை அழிந்து போகச் செய்யும். இவ்வாறு படைத் தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையும் நிகழ்த்த வல்ல தாகத் திகழ்தல் பற்றியே, ஓங்காரம் மிக்க சிறப்புடைய பெருமந்திரம் என மதிக்கப்பெறுகின்றது.

இயற்கை அமைப்பு :

மேலும் நமது உடம்பின்கண் உள்ள, சிறந்த உறுப்புக்கள் அத்துணை யும், ஓங்கார வடிவினவாகவே திகழ்கின்றன. நமது உடம்பின் வளர்ச்சி க்கும் இயக்கத்திற்கும் இன்றியமையாத கருவியான நெஞ்சப்பையின் வடிவமானது, தாமரை முகையை ஒத்து ஓங்கார வடிவமாகவே அமைந் திருக்கின்றது. இங்ஙனமே மூளை, இரைப்பை, மலக்குடல், சிறுநீர்ப் பை, கருப்பை முதலியன பலவுங்கூட, ஓங்கார வடிவம் உடையனவாகக் காணப்பெறுகின்றன. ஒலிகளை யெல்லாம் கேட்பதற்குரிய கருவியாகத் திகழும் காதும்கூட, ஓங்கார வடிவம் பெற்றே விளங்குகின்றது. இவ் வியற்கை யமைப்புகள் அனைத்தும் ஓங்காரத்தின் சிறப்பையே உணர்த்தி நிற்றல் காணலாம்.

உட்பொருள் :

ஓங்காரத்தின் பிரிவெழுத்துக்கள் ஆகிய அகாரம் உகாரம் மகாரம் என்னும் மூன்றில், முதல் நின்ற அகாரம் இருக்கு வேத முதல் மந்திரம் ஆகிய 'அக்நிமீளே' என்பதன் முதலிலும்; இடை உகாரம் எசுர் வேதத் தின் இடையிலுள்ள "யோநிஸ் சமுத்திரோ பந்து" என்பதன் நடுவிலும்; கடைநின்ற மகாரம் சாம வேதத்தின் இறுதியிலுள்ள "சமாநம்வரம்" என்பதன் ஈற்றிலும் நின்று, வேதங்களெல்லாம் ஓம் என்னும் மொழி யின் விரி பொருளேயாம் என்பதனை அறிவிக்கின்றன என அறிஞர்கள் கூறுவர். இங்ஙனமே தமிழ் மறைகளாகிய சைவத்திருமுறைகள் பன்னிரண்டும்கூட ஓங்காரத்தின் உட்பொருளாதல், யாவரும் இனி தறிந்தது; சைவத்திருமுறைகள் "தோடுடைய செவியன்" என்று தொடங்கி, "உலகெலாம்" என்று நிறைவு பெறுதல் காணலாம்.

யானைமுகம் :

விநாயகப் பெருமான் பிரணவம் ஆகிய ஓங்கார மந்திர சொரூபமாக விளங்குபவர் என்பதனையே, அவர்தம் யானைமுகத் திருவுருவம் புலப் படுத்தி நிற்கின்றது. ஓங்கார மந்திரவுருவினை, மக்கள் தம் கட்புலம் கொளக் காணும் ஒரு சிறந்த வடிவிலே வைத்துக் காட்டி யுணர்த்த விரும்பிய நம்முன்னோர்கள், யானையின் முகமும் அதன் தொங்கி நீண்டு சுருளும் துதிக்கையும் 'ஓ' என்னும் எழுத்தின் வடிவத்தை முழுவதும் ஒத்திருத்தல் கண்டு, அதனையே விநாயகப் பெருமானின் திருவுருவ மாக அமைத்துப் போற்றி வழிபட்டு வருகின்றனர்.

எல்லா உயிர்ப் பொருள்களிலும் முழுமுதற் கடவுள் ஒருவரே பெரிய வராதல் போல, எல்லா உயிர்களிலும் யானையே உருவத்தாலும் வலிமை யாலும் பெரியதொன்றாக விளங்குகின்றது. கடவுள் தன்னை அன்பினால் உருகி வழிபடும் அடியவர்க்கு எளியராய், அவர் வேண்டுவன எல்லாம் விரும்பிச் செய்தல்போல, யானையும் தன்னிடம் அன்புகொண்டு பழகு வார்பால் தனது பெருவலிமையினைக் காட்டாமல், அவர்கட்கு மிகவும் அடங்கிப் பணிந்தொழுகி, அவர்கள் வேண்டும் உதவிகள் பலவும் செய்து பெரிதும் பயன்படுவதொன்றாகத் திகழ்கின்றது. இனைய பல பண்பொப்புமைகளும், விநாயகரை யானை எனவே கொண்டு, கவிஞர்கள் போற்றி வழிபட்டு மகிழ்தற்குக் காரணங்களாயின.

திருவுருவச் சிறப்பு :

விநாயகரின் திருவுருவம் நம் உடம்பைப் போன்றதன்று. விநாயகப் பெருமானின் திருமேனி, நம்முடைய கருமேனி கழிக்க வந்த கருணைத் திருமேனி. அது ஞானவடிவமேயாகிய திருமேனி. விநாயகரின் திரு வுருவம், யானை முகமும், மூன்று கண்களும், இருசெவிகளும், ஐந்து கரங்களும், ஒருபெரிய வயிறும், இரு குறுகிய திருவடிகளும் கொண்டது. யானை முகம் விநாயகப் பெருமான் பிரணவ வடிவினர் என்பதையுணர்த் தும். மூன்று கண்களும், ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்று ஒளிப் பொருள்களையும் குறிக்கும். ஐங்கரங்களும், அவர் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களையும் செய்பவர் என்பதைப் புலப்படுத்தும்.

ஐங்கரங்கள் :

அவர் தமது கைகளுள் ஒன்றில், நம்பொருட்டு மோதகம் வைத்தி ருக்கின்றார்; மற்றொரு கையில் தேவர்களைக் காப்பதற்காகத் தந்தம் ஏந்தியிருக்கின்றார்; பிறிதொரு கையில், தம்முடைய தாய் தந்தையர் ஆகிய பார்வதி பரமேசுவரர்களை திருமுழுக்குச் செய்து வழிபடுதற் பொருட்டு' நீர்க்கலசம்' தாங்கியிருக்கின்றார்; ஏனைய இரண்டு கைகளி லும், உயிர்களாகிய நம்மை ஆணவ மலம் ஆகிய யானையானது பற்றி நலிவுறுத்தாதிருக்குமாறு செய்தற் பொருட்டுப் பாசமும் அங்குசமும் வைத்துக் கொண்டிருக்கின்றார்.

அங்குசபாசம் :

விநாயகரே ஒரு யானையாக இருந்தும், யானைகளை அடக்கும் கருவிகள் ஆகிய அங்குச பாசங்களை ஏந்தியிருப்பது, அவர் தமக்கொரு தலைவரை இன்றித், தாமே யாவர்க்கும் தலைவராக விளங்கும் தனி முதன்மைத் தன்மையினைத் தெளிவிக்கும். "மும்மலங்கள் ஆகிய மதம் பிடித்து, ஞானம் என்னும் கம்பத்தினை யுடைந்தெறிந்து, அன்பு ஆகிய சங்கிலியை அறுத்துக் கொண்டு, அருள் என்னும் கூடத்தை விட்டு நீங்கி, உலகமாகிய பெருங்காட்டில் மேய்ந்துகொண்டு, எப்பாகர்கட்கும் அடங்காதனவாக இயங்கி வரும் உயிர்கள்" ஆகிய யானைகளை அடக்கி, ஆண்டு கொண்டு அருள் புரிவதற்கு அடையாளமாகவே, விநாயகர் அங்குச பாசங்களைத் தாங்கியிருக்கின்றார் என்றலும் ஒன்று.

எல்லாமாந் தன்மை :

விநாயகருடைய திருமேனியை உற்று நோக்கினால், மேலும் பல அரிய உண்மைகள் புலனாகும். ஒருபுறம் மருப்புடைமையால் ஆண் எனவும், மற்றொரு புறம் மருப்பின்மையாற் பெண் எனவும், இங்ஙனம் இருதிறமும் விரவி நிற்றலால் அலி எனவும் அவர் இயங்குகின்றார். அவர்தம் திருவுருவம் உயர்திணையாகவும் விளங்குகின்றது. தலை யானைத் தலையாகவும், உடல் தேவ மனித உடலாகவும், கால் குறட்பூதமாகவும் அமைந்து, விநாயகர் எல்லாமாய் அல்லவுமாய் விளங்குதலை அறிவுறுத்து கின்றது.

ஆதார ஆதேயம் :

மிகப் பெரிய யானை வடிவமுடைய விநாயகர், மிகச் சிறிய பெருச்சாளியை வாகனமாகக் கொண்டிருப்பது, அவரே எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாகவும், ஆதேயமாகவும், தாங்கும் நிலையிலும் தாங்கப் பெறும் நிலையிலும் விளங்கி வருகின்றார் என்னும் உண்மையைப் புலப் படுத்துகின்றது.

முடிவுரை :

விநாயகர், சித்தி-புத்தி என்னும் இரு சக்திகளையும் தமக்குரிய தேவி மாராகக் கொண்டிருக்கின்றார். அவரை வணங்கினால், நமக்குச் சித்தி (நற்பேறு), புத்தி (நல்லறிவு) வாய்த்தல் திண்ணம்.

"விநாயகனே வெவ்வினையை வேர் அறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்-விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் வேந்தனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து"

-நம்பியாண்டார் நம்பிகள்.




# உள்ளம் பெருங் கோயில்

(திரு. சி. இராமலிங்கம், எம். ஏ.,)

"தூய மாதவஞ் செய்தது தொண்டை நன்னாடு" என்பர் சான்றோர். நல்லொழுக்கம் எக்காலத்திலும் உயர்ந்தோங்கும் பெருமை வாய்ந்தது தொண்டைநாடு என்பது சேக்கிழார் வாக்கு. நான்கு வேதங்களுஞ் சிறந்து விளங்கிய பழம்பதி திருநின்றவூர் என்பதாகும். இவ்வூரில் தத்தமக்குரிய குல ஒழுக்கத்தில் சிறந்து விளங்கியமறையவர் குலத்தில் பூசலார் தோன்றினார். அவர் தம்சிந்தையைச் சிவன் கழலில் சேர்த்து வாழ்ந்து வருவாராயினர். நன்னெறியாகிய சிவநெறியினின்று பிறழாத அன்பு கொண்டவராக விளங்கினார்; சிவ பக்தி, சிவனடியார் பக்தியிற் சிறந்தவர்; சிவனடியார் வேண்டுவனவற்றை எவ்வாறேனும் முயன்று கொடுப்பவர். இறைவன் மகிழ்ந்து உறைவதற்கு ஏற்றதோர் ஆலயம் ஒன்று கட்ட அவர் எண்ணினார். தாம் பொருட் பேறு இன்றி யாது செய்ய இயலும் என்று உளம் நைந்தார். ஆதலால் தளர்வெய்தி நினைவினால் கோயில் கட்ட உறுதி பூண்டார்.

இவ்வாறு துணிந்த பூசலார் மனத்தினாலே அடிகோலினார். கோயில் கட்டுவதற்கு வேண்டுவன யாவற்றையும் திரட்டினார். அடிவரி முதல் உபானவரிவரை வருகின்ற அடுக்குகள் யாவற்றையும் சிற்பவேலைப்பாடுகள் பொருந்துமாறும் விமானத்தின் முடிவில்வரும் சிகரத்தை ஒரு முழு அளவு உள்ளதாகக் கொண்டும் நீண்ட நாட்களாகக் கோயிலை நினைவினால் எழுப்பினார். இவ்வாறு சிந்தையில் எழுப்பிய கோயிலில் சிவபெருமானைத் தாபிக்கும் நன்னாளையும், நல் வேளையையும் குறிப்பிட்டார்.

காடவ மன்னர் ஒருவர் காஞ்சிபுரத்தில் கற்றளி ஒன்று கட்டிமுடித்தார். ஆங்கு பிரதிட்டைக்கென ஒரு நன்னாள் குறிப்பிடப்பெற்றது. அந்நாளுக்கு முன்னாள் சிவபெருமான் மன்னர் கனவிலே தோன்றி பூசலார் எழுப்பும் கோயிலைக் குறித்துச் சொன்னார். தாம் அக்கோயிலுள் மறுநாள் எழுந்து அருளுவதாகவும், மன்னர் தம்முடைய ஆலயப்

பிரதிட்டையை அந்நாளைத் தவிர்த்து வேறு ஒரு நன்னாளில் வைத்துக் கொள்ளும்படியும் கூறினர். மன்னர் விழித்தெழுந்து பூசலாரைக் காணும் அவா மீதூர உடனே புறப்பட்டார்.

திருநின்றவூரை அடைந்தார்; பூசலார் எழுப்பிய கோயில் யாண்டுளது என வினவி, பூசலார் அப்பதியில் கோயில் ஏதும் எழுப்பவில்லை என்று அறிந்தார். பின்னர் வேதியர்களை அழைப்பித்து "பூசலார் யாவர்?" என்று கேட்டார். அந்தணர். "பூசலார் இவ்வூரவர்'' என்று செப்பினர். மன்னர் தாமே பூசலாரைக்காணச் சென்றார். அவரைத் தொழுது அவரது கோயிலில் அண்டர்நாயகர் எழுந்தருளும் நாள் என்று அறிந்து அவரை அடிபணிய வந்ததாகக் கூறினர். இவ்வுரை கேட்ட பூசலார் மருட்சியுற்றார். பூசலார் தம்மையும் ஒரு பொருட்டாக எண்ணி இறைவன் அருளிச்செய்த பாங்கினை நினைந்து மகிழ்ந்தார். மன்னவரிடம் தாம் முயன்று எடுத்த கோயில் மனக்கோயில் என்றார். காடவ மன்னர் இதைக்கேட்டு வியப்புற்று, "புரையறு சிந்தை அன்பர் பெருமை'' என்னே என்று போற்றினர். நிலமுற வீழ்ந்து வணங்கிய பின் மன்னர் தம் பதிக்கு மீண்டார்.

பூசலார் தாம் அமைத்த உள்ளக் கோயிலில் அரனுரைத்தாபித்து பன்னாள் பூசனைகளைப் பெருமைப்பட நிகழ்த்தி மன்றுள்ளாடும் பெருமானின் திருவடிநீழல் சார்ந்தார்.

திருவுருவ வழிபாடு சைவசமயத்துள் சிறந்த இடம் பெறுகிறது. என்றாலும் ஆலயங்களுள் காணப்படும் திருமேனியைக் குறியெனக் கொண்டு, தொழுது அவரவர் சிந்தையுள் நிலைபெறச் செய்து வழிபாட்டின் முதிர்ச்சியில் இரண்டற ஒன்றுதலே முடிந்த பயனாகும். இவ்வுண்மையைப் பூசலார் நாயனாரது வரலாறு தெள்ளிதின் உணர்த்துகிறது. குற்றம் நீங்கிய சிந்தையுள் நிலைபெற்று விளங்குகிறான் நிமலன். "நினைப்பவர்மனம் கோயிலாகக் கொண்டவனன்றோ பரமன்''. உள்ளத்தில் பெருமான் எழுந்து அருள்வனேல் எங்கும் எப்போதும் வழிபாடு இயற்றலாம். எம்பெருமான், உள்ளத்தில் நிலைபெறவேண்டின் அது தூயதாதல் வேண்டும்; மனம் மாசற்ற நிலையில் விளங்குதல் வேண்டும். இறைவன் நினைவு முறுகி எழஎழ மன மாசுகள் நீங்கும். அடியவர் வழிபாடும், இறைவனிடத்து மாறாக்காதலும் பெருகப் பெருக இறைவன் நம் உள்ளத்தில் விளங்குதல் திண்ணம். பூசலார் வரலாறு உணர்த்தும் இவ்வுண்மையினை உன்னுவோமாக.

—:0:—



# மெய்ப்பொருள் காண்பது அறிவு

## அறிவைப் பற்றிய ஆய்வு

வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி எம்.ஏ.,பி.ஓ.எல்.,

அருள் முரசிலிருந்து வெளிப்படுவது அருளோசை. தமிழக மக்களின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைக்கப்பெற்ற நன்மைப் பொருள்களுள் ஒன்று முரசு. தமிழக மூவேந்தர்கள் முரசினை அரசின் மூலப்பொருள் எனக் கொண்டு போற்றி வந்தார்கள். ஒலியை எழுப்பும் பலவகைக் கருவிகளுள் ஒன்ருக முரசினைக் கருதாத நம் தொன்மைத் தமிழினம் வீரம், மணம், கொடை போன்ற தம் சிறப்புப் பண்புகளோடு முரசைத் தொடர்புபடுத்திக் கண்டார்கள். வீரமுரசு, மணமுரசு, கொடைமுரசு என்றெல்லாம் உள்ள பிரிப்புக்கள் இவ்வுண்மையை உணர்த்தும்.

"ஓசை ஒலியெலாம் ஆனுய் நீயே" என்பது அருள் வாக்கு. ஓசை வேறு; ஒலி வேறு. ஓசை பொருளுடையது; ஒலி பொருளற்றது. முரசிலிருந்து வெளிவருவது ஒலியன்று; ஓசை. உலகியற் சார்பான பொருள் விளக்கங்களை எடுத்து விளக்கும் ஓசைகளை வெளிப்படுத்த அரசியல் முரசுகளை நம் தமிழகத்து மூவேந்தர்கள் பயன்படுத்தினர். வள்ளல் இராமலிங்க அடிகள் அருள் முரசு கொட்டச் செய்து ஆன்மீகப் பொருள் விளக்கங்களை உணர்த்தினர்.

ஆன்மீகப் பொருள் விளக்கம் செய்யும் ஓசையை வெளிப்படுத்தும் அருள் முரசினைப் 'பறை' என்ற சொல்லாற் குறிப்புச் சொல்லாற் பாடிப் பரவினர் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாள் அம்மையார். சங்கத் தமிழ்மாலை முப்பதும் பாடிப் பெற்ற பரிசில் 'பறை' என்பதே-யன்றே! இதை ஒரு வாத்திய விசேஷம் என்று விளக்கம் செய்தார்கள் முன்னோர்கள். அது எது? எங்கே இருப்பது? யார் கொடுப்பது? என்பன சில வினக்கள். அனைத்துயிர்களின் உடம்புகளிலும் இப்பறை இறையருளால் அமைந்துள்ளது. இதை அறைந்து ஓசையெழுப்பும் நாயகனுகப் பெருமான் அமைகிருன். அருளாளர்கள் இம்முரசின் ஓசையைச் செவிமடுக்கும் ஆற்றல் பெற்றவர்கள். அவர்களின் சொன் மலர்கள் இவ்வோசையையும் பொருளையும் தாங்கி வருகின்றன. அருளாளர்களாகிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் அருளிய திரு-வமுதப் பாக்கள் எல்லாமக்களுக்கும் உதவியாயிருந்து அருள் ஓசையைக் கேட்கத் துணைபுரிகின்றன. இந் நிலையில் இன்று அருளோசை அனைத்து மக்களின் இதயங்களிலும் சென்று அமர்ந்து, இன்ப நாடிகளைத் தட்டி எழுப்பி, அருள் விளக்கக் கருத்துக்களை உணர்த்தத் தொடங்கி விட்டது.

இருபதாம் நூற்றாண்டில் 'வாழ்க்கை' என்ற சொல்லால் உணர்த்தப் பெறும் நடை முறையைப் பற்றி ஆராய முற்படாதவர்களே இல்லை எனலாம். மேட்டுக் குடியினர் எனப்பெறும் ஒருசாரார் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கவே நேரமில்லாதவர்கள் என்றாலும் 'வாழ்க்கை' அவர்-களுக்கு ஒரு கசப்புப் பொருளாகவே அமைந்து விடுகிறது. பள்ளக் குடியினர் அல்லது மூன்றாம் நிலையினர் என்றும் வாழ்க்கையின் ஓரங்களில் இருப்பவர்களே. வாழ்க்கை என்பது அவர்களுடைய வாழ்வில் பிரச்-சினைக்குரியது ஒன்றன்று; இடைப்பட்ட வாழ்வில் நடைப்பட்டார் எவரோ அவரே வாழ்வில் தடைப்பட்டார் எனலாம். இவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் நாள்தோறும் வாழ்க்கை எது? என அறியத் துடிக்கிறார்கள். நடுத்தர மனிதனின் அன்றாட வாழ்வியற் பிரச்சினைகளின் முடிபுகளாக எழுந்த கருத்துக்களே தத்துவங்கள்.

வாழ்வியலை ஆராய்ந்து, பல முடிபுகள் வெளிப்படுத்தப் பெற்றன. வாழ்வியல் பற்றிய முடிபுகளை வெளியிடுவதற்குத் துணைநிற்பது அறிவு. எறும்பு முதல் யானை வரை உள்ள எல்லா உயிர்ப் பொருள்களும் வாழ்-கின்றன; அவைகளிடத்தும் அறிவின் கூறுகள் காணப் பெறுகின்றன. ஆனால் அவைகளோ, வாழ்வியல் பற்றிய முடிபுகள் எவற்றையும் வெளிப்படுத்தவில்லை. கருத்துக்களை வெளிப்படுத்தக்கூடிய கருவியாகிய மொழி அவைகளிடம் இல்லை என்ற குறைமட்டும் அன்று; சிந்தனை இல்லை என்பதே. சிந்தனை என்பது ஒரு களம். மாறுபட்ட, பல்வேறு வகைப்பட்ட கருத்துக்கள் மோதுகின்றன. இம் மோதல்களே பிரச்சினை-கள், சிந்தனை என்ற போர்க்களத்தில், போர்க்கோலம் புனைந்து எழுந்து மோதுகின்ற பிரச்சினைகளில் வெற்றி பெற்றவைகள் சில அமையலாம். அவைகளே சிந்தனையின் முடிவுகள் எனப்பெற்று வெளியிடப் பெறுகின்றன; பறைசாற்றப் பெறுகின்றன.

எனவே சிந்தனைதான் மக்களை ஏனை மிருகம் போன்றவைகலிலிருந்-தெல்லாம் மாற்றும் தன்மையுடையது எனக் கொள்ளலாம். அதுமட்டுமா; மக்களுள்ளும் ஒரு சிலரைத் தனியே பிரித்து, உலகிற்கு அறிமுகப்படுத்தும் ஆற்றலுடையதாகவும் அது விளங்குகிறது. இச் சிந்தனையைத்தான் 'காண்பது அறிவு' என்று குறிப்பிட்டுக் காட்டுவார் திருவள்ளுவர்.

சிந்தனையின் முடிவுகள் நல்லவைகளாகவே இருக்கும் என்ற வரையறையில்லை. 'வாழ்க்கையை மலர்ப்படுக்கை என்று முடிவு கட்டியதும் ஒரு சிந்தனையே. வாழ்க்கை மலர்ப்படுக்கைதான்; ரோசாமலர்ப்படுக்கை-தான்: முள்ளும் இருந்து குத்தும் என்று அறிவுறுத்தியதும் சிந்தனையே. இவ்வாறு பல்வேறு முடிவுகள் வரக் காரணம் என்ன? சிந்தனையின் அடிப்படை வேறுபாடுகளே.

இந்நிலையில் தான் வேறு ஒருவகை ஆய்வுரை எழுந்தது. வாழ்க்கை என்ன? என்பது போன்ற வினாக்களை ஆராய்வதற்கு முன்னர், அவை-களை ஆராய்வதற்க்குப் பயன்படுத்தப் பெறுகிற கருவியாகிய 'அறிவு

என்பது சரியானதா? பிழையுடையதா? என்பதை ஆராய வேண்டும். பொன்னை நிறுத்து அதன் எடை முதலியவைகளை ஆராய்வதற்குத் தராசு தேவை. ஆனால் தராசு சரியானதுதானா? என்று ஆராய வேண்டும் கருவியாகிய தராசே தவறுடையதாக இருந்தால், அதனால் நிறுக்கப்பெறும் பொருளின் அளவு எப்படிச் சரியானதாக இருக்க முடியும்! அவ்வாறே வாழ்வியற் பிரச்சினைகளை எடைபோட வேண்டிய தராசுகளாகிய சிந்தனை, அறிவு ஆகிய கருவிகள் சரியானவைதானா? என்ற ஆராய்ச்சி மிகவும் அவசியமாக, முன்னதாகச் செய்யப்பட வேண்டிய ஒன்று. இத்தகைய ஆராய்ச்சியை எடுத்துக்காட்டி நிற்கும் குறட்பகுதிகளே "மெய்ப் பொருள் காண்பது அறிவு", "செம் பொருள் காண்பது அறிவு" என வருபவைகள்.

இப்போது நாம், வாழ்வு எது? என்ற முதற்கட்டப் பிரச்சினையை விட்டு விலகிச் சென்று, வாழ்வியலை அளந்து பார்க்கும் கருவியை நாடி பிடித்துப் பார்க்கும் இரண்டாவது கட்டத்தின் எல்லையில் நிற்கிறோம்.

உலகில் நாம் சந்திக்கின்ற துலாக் கோல்கள் பல. அவற்றை ஆராயும் முறைகளும் பல. சில துலாக் கோல்களைக் கண்டு பிடித்த மேலை நாட்டு நிறுவனங்கள் கூட, அத்துலாக்கோல்கள் சிலபோது தரங்கணிக்கத் தவறிய நிலையில் காரணம் தெரியாது மலைகின்றன. ஆனால் அனைத்து அளவைகளுக்கும் மூலமாக நின்ற துலாக்கோலாகிய 'அறிவை' நாடிபிடித்துப் பார்த்து ஆராய்வது மிக எளிது என்று உறுதியளிக்கிறார் திருவள்ளுவர். ஆனால் அவர் சொல்லும் வழியோ விந்தையானது.

தராசு ஒரு பருப் பொருள். நிறுக்க வேண்டிய பொருள்களைத் தட்டில் வைப்பதற்கு முன்னாலேயே தராசைத் தனியே நிறுத்தி, அது சரியானதா? பிழையானதா? என்பதைக் கண்டு பிடித்து விடலாம். ஆனால் அறிவோ கருத்துப் பொருள். எனவே, அதை அளக்கும் முறையும் வேறே. பருப்பொருளாகிய புளியை அளக்கும் தராசு நுண்பொருளாகிய கருத்துப் பொருளாகிய 'மானம்' போன்ற பண்புகளை நிறுக்கப் பயன் படுமா? ஆயின், அறிவை எடைபோடுவதற்கு உரிய வழியாது?

அன்பு, அறிவு போன்ற நுண் பொருள்களை அளந்தறிய வேண்டுமானால் அவைகளைச் செயற்படுத்திப் பார்க்க வேண்டும். அன்பு என்ற நுண்பொருள் அது செயற்பாட்டுக்கு வரும்போதுதான் அதை மதிப்பிட முடியும். அவ்வாறே அறிவை எடைபோட வேண்டுமானால் அதைச் செயற்படுத்த வேண்டும். அறிவு என்னும் தராசுத் தட்டில் பொருள்கள் வைக்கப் பெற்று விடுதல் வேண்டும். அது தரும் முடிவை வைத்துக் கொண்டுதான் அதன்—அவ்வறிவின் தரத்தை நாம் கணிக்க முடியும். இது புதுநெறி அன்று; பழக்கப் பட்ட நெறியே. கத்தியின் கூர்மையை அளந்து பார்க்க வேண்டுமாயின் பொருள்களை அரிந்து பார்ப்பதன் மூலம் தான் முடியும்.

வாழ்க்கை என்பது என்ன? உலகில் பலவகைப் பொருள்கள் உள்ளன. ஒருபொருள் அதனோடு அண்டியிருக்கும் பலவகைப்பட்ட பொருள்களோடு இணையும் இணைப்பை இயற்கை உருவாக்கியிருக்கிறது. இரு பொருள்களின் இணைப்பில் எழுகின்ற நுகர்ச்சியை உள்ளீடாகக் கொண்டதே வாழ்க்கை. ஒரு தனி மனிதன், தான் இணையும் பொருள்களின் தாரதம்மியங்களைக் கொண்டே வாழ்வியலின் தாரதம்மியங்களும் வரையறை செய்யப் பெறுகின்றன. எனவே வாழ்வியலை வரையறை செய்யப் பெறுவதற்கு முன் வாழ்வியலோடு இணைகின்ற பொருள்களின் தன்மையை அறிந்து வரையறை செய்ய வேண்டும், இதனாலேயே பொருளின் தன்மையை உள்ளவாறு அறிந்து வரையறை செய்வது எதுவோ? அதுவே அறிவு எனப்பெறுவது என்றார் திருவள்ளுவர். எனவே அறிவாராய்ச்சியானது பொருளாராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. அறிவாராய்ச்சியைப் பொருளாராய்ச்சியுடன் இணைத்துக்காட்டி, ஆய்வுமுறையின் வழி இதுவே என உணர்த்த முற்பட்ட நிலையிலேயே மெய்ப்பொருள் காண்பது அறிவு என்று கூறிப் போந்தார்.

---




ஸ்ரீ

# மதுரகவி ஆழ்வார்

[வித்துவான் திரு.கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

உலகத்தில் பண்டைக்கால முதற்கொண்டே ஆன்மீக நெறியில் சிறந்து விளங்கிய தேசம் நம் பாரத தேசமாகும். அப்பாரத பூமியிலும் திருமாலடியார்களாய் விளங்கி வைணவ சமயத்தையும், பக்தி நெறியையும் தமிழகத்தில் பரப்பியவர்கள் ஆழ்வார்கள். திருமாலுடைய குணங்களிலே ஆழங்கால்பட்டு மயங்கி ஆழ்ந்தவர்களே ஆழ்வார்களாவர். இத்தகைய பெருமைபொருந்திய ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவராகிய மதுரகவி ஆழ்வார் தென்பாண்டி நாட்டுத் திருக்கோளூரில், சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத்திரத்திலே முன்குடுமிச் சோழியர் குலத்தில் தோன்றினர்.

இவர் சிறுவயதிலேயே முறையாகப் பல கலைகளையும் கற்றுத் தேர்ந்து ஞானியராய் விளங்கினர். இவருக்கு இசைக்கலையில் மிகவும் ஈடுபாடுண்டு. கைகளில் தாளங்களையேந்தி பண்ணார் தமிழிசைப் பாடல்களாகிற திருவாய்மொழியை இசையோடு பாடி நாடு நகரங்களை உய்வித்தவராவர். ஆழ்வார்களில் மதுரகவி ஆழ்வாரைத் தவிர மற்றவர்களெல்லாம் திருமால் பெருமைகளையும், சரிதங்களையும் விரிவாகப் பாடியுள்ளனர். இவர் ஒருவர் மட்டுமே தம்முடைய ஞானசிரியரான நம்மாழ்வாரைத்தவிர வேறுதெய்வம் இல்லையென்று உணர்ந்து வாழ்ந்து வந்தார். மதுரகவிகள் அழியக்கூடிய இவ்வுலக இன்பங்களிலே நசையற்றுச் சிறுவயதிலேயே விரக்தியுடையவராய் வடதேச யாத்திரையை மேற்கொண்டார். வடக்கேயுள்ள அயோத்தி முதலிய திருத்தலங்களுக்குச் சென்றும், கங்கை போன்ற புண்ணிய நதிகளில் நீராடியும் வருகையில் ஒருநாள் இரவு தூக்கமின்றிக் கலங்கிய நிலையில் வெளியே உலாவி வரலானர். அப்பொழுது திடீரென்று தென்திசையில் ஊரே பற்றி எரிவதுபோன்றதொரு ஒளிப்பிழம்பைக் கண்டார். கண்டவாறே, மிகவும் திகைத்து அத்திசையை நோக்கியிருக்கும் பொழுது, கொஞ்சம் கொஞ்சமாக அவ்வொளி மங்கி மறைந்துவிட்டது. என்ன நேருமோ என்று அஞ்சிப் பின்பு படுத்து உறங்காது சிந்தைசெய்தார். மறுநாளும் அதே தென்திசையில் ஒளி உண்டாகவே இவர் சிறிதும் அஞ்சாமல் அவ்வொளி தோன்றிய திசையை நோக்கி நடந்தார். இவ்விதம் இரவு

நேரங்களில் ஒளி தோன்றிய திசையை நோக்கி நடப்பதும், பகல்வேளை களிலே உறங்கி ஓய்வெடுப்பதுமாய்ச் சென்று கொண்டேயிருந்தார். திருவேங்கடம், திருவரங்கம் முதலான திருத்தலங்கள் வந்தபின்பும், இரவில் தோன்றும் ஒளி மேலும் பேரொளியாய்த் தென்திசையின்கண் தோன்றவே பலகாவதம் கடந்து ஆழ்வார்திருநகரி என்று சொல்லப் படும் திருக்குருகூரை அடைந்தார். அன்றிரவு வழக்கம்போல் தோன்றும் ஒளிப்பிழம்பு தோன்றாததைக்கண்டு வியந்து இரவு கழிந்தவாறே அவ் வூர் மக்களிடம் தாம் அந்நாள்வரை இரவில் கண்ட அற்புதத்தைப் பற்றிக் கூறி "இவ்வூரில் ஏதேனும் விசேட நிகழ்ச்சி உண்டோ" என்று வினவினார்.

அவர்களும், அவ்வூரில் காரியாருக்கும், உடையநங்கையாருக்கும் திருப்புதல்வராகத் தோன்றிய 'நம்மாழ்வார்' என்னும் குழந்தை "முத்தனைய முறுவல்செய்து மூக்குறிஞ்சி முலையுணாதே" என்கிறபடி ஒருவித சலனமுமில்லாமல் கிடக்கின்ற நிலையையும், அதைக்கண்டு அஞ்சிய தாய்தந்தையர் அவ்வூரில் கோயில் கொண்டிருக்கும் 'பொலிந்துநின்றபிரான்' என்னும் பெருமாள் கோயிலுக்கு எடுத்துச் சென்று அவன் திருமண்டபத்தே வைத்து வணங்கியவுடன் அப்பெரு மாளும் அக்குழந்தைக்கு 'மாறன்' என்ற திருப்பெயரைச் சூட்டித் திருப் புளி மரத்தடியிலே விட்டுவிடப் பணித்த வரலாற்றை விரித்துக் கூறினர்.

மதுரகவியாழ்வாரும் அவ்வரலாற்றைக் கேட்டு அதிசயித்து அக்குழந் தையைக் காணவேண்டுமென்று அப்புளியமரத்தடிக்குச் சென்றார். அங்குப் பதினாறு கலைகளோடு கூடிய சந்திரனைப் போன்று பேரழகு படைத்து, ஒன்றும் பேசாமல் கண்மூடி மௌன நிலையிலிருக்கும் பரமகுரு வான பராங்குசரைக் கண்டார். கண்டவாறே இவருக்கு உணர்வு உண்டோ? செவி கேட்குமோ? என்றெல்லாம் ஐயம் தோன்றவே தன் அருகிலிருந்த ஒரு குண்டுக் கல்லை யெடுத்து அவர் முன்னே திடீ ரென்று போட்டார். அவ்வோசை கேட்டு நம்மாழ்வாரும் திடுக்கென்று தம் திருக்கண்களை மலர விழித்து நோக்கினார். அதற்கு மேலும் இவருக்கு வாக்கு உண்டோ என்பதை அறிய ஆவல்கொண்டு 'செத்தத் தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்? என்று கேட்டார். அதற்கு நம்மாழ்வாரும் 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று பதில் அருளிச்செய்தார். [செத்தத்தின் வயிற்றிலே சிறியது பிறக்கையாவது—செத்தது என்பதற்கு அசித்து என்பது பொருள். உயிரற்றதாய் ஜடமாய் இருக்கையாலே அசித்து எனப் படுகிறது. அதன்வயிற்றில் சிறியது பிறக்கையென்றால்—சரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பைச் சொல்லுகிறது என்பர். அதாவது சரீரத்தோடே ஆத்மாவுக்குத் தொடர்பு உண்டானால், அதனால் உண்டா கிற இன்பமும், துன்பமும் அந்த ஆத்மாவையும் சேர்கிறது. அத்தைத் தின்று அங்கே கிடக்கையென்றால் அச்சரீரத்திலே உண்டாகிற இன்ப

துன்பங்களைத் துய்த்துக்கொண்டு அச்சரீரத்தையே பற்றியிருப்பது]. இவ்விதம் சரீரஆத்ம சம்பந்தத்தைப் பற்றிய ஆன்மநேய நெறியிலே பதிலுரைத்த நம்மாழ்வாராகிற பேரொளியே தாம் முன்னிரவுகளிலே கண்ட ஒளி என்று முடிவுசெய்து அவருடைய தவவலிமையையும், ஞானத்தையும் உணர்ந்து அவர் திருவடிகளிலே தண்டனிட்டுத் தம்மை ஆட்கொண்டருளும்படி வேண்டி நின்றார்.

நம்மாழ்வாரும் மதுரகவிகளைத் தம் சீடராக ஏற்றுக்கொண்டு வடமொழியிலுள்ள நான்கு வேதங்களையும், திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்ற பெயர்களில் தமிழில் இயற்றி அப்பாக்களை நல்லிசையோடு பாடிவரும்படி அருள் பாலித்தார். மதுரகவிகளும் 'மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப் பாடி என்நெஞ்சுள் நிறுத்தினன்' என்று மிகவும் கொண்டாடினர். மேலும் வடமொழி வேதத்தை இன்னார்தான் ஓதலாம் என்கிற முறையால் அது தீண்டாததாயிருக்கையாலே உலகத்தார் யாவரும் சாதி, சமய இனவேறுபாடின்றி ஓதும்படி வேதம் தமிழ்செய்த மாறனைப் போற்றிப் புகழ்ந்தார். "உண்ணுஞ் சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்ற பக்குவ நிலையில் எல்லாவற்றையும் இறைவனாகக் காணும் நம்மாழ்வாருடைய சாமவேத சாரமான திருவாய்மொழியே உலகில் தொண்டர்க்கு அமுதூறித்தித்திக்கும் சொன்மாலைகள் என்று அவருடைய பசுந்தமிழை எங்கும் பரப்பி வந்தார். நாடும் நகரமும் நம்மாழ்வாருடைய பெருமையை அறிய வேண்டுமென்று எண்ணியவராய் "வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்; திருவாய்மொழிப் பெருமாள் வந்தார், திருநகரிப் பெருமாள் வந்தார், திருவழுதிவளநாடர் வந்தார், திருக்குருகூர்நம்பி வந்தார்" என்று இவ்விதம் பலபடியாகப் பலவிருதுகளாலே தம் பரமகுருவான நம்மாழ்வாரைப்பற்றித் தெருவெல்லாம் முழக்கமிட்டார்.

இவ்விதம் ஆழ்வாருடைய விருதுகளைச் சொல்லி முழக்கமிடும்போது ஒருநாள் சங்கப்புலவர் ஒருவர் மதுரகவிகளை இடைமறித்து எங்கள் சங்கப் புலவரோடு வாதம் செய்து வெற்றிபெற்றுச் சங்கப்பலகை ஏறினுலல்லாது தாங்கள் இவ்விதம் "வேதம் தமிழ்செய்த மாறன் என்று விருது கூறிச்செல்ல அனுமதியோம்" என்று தடுத்து நிறுத்த, உடனே மதுரகவிகளும் எங்கள் குருவான நம்மாழ்வார் எங்கும் வரமாட்டார். ஆனுலும் அவருடைய அருளிச்செயலைச் சங்கப்பலகை ஏற்குமேயானுல் ஆழ்வாரையும் சங்கமேற்றதாகக் கொள்ள வேண்டுமென்று சொல்லி

"கண்ணன் கழலிணை,—நண்ணும் மனமுடையீர்,
எண்ணும் திருநாமம்,—திண்ணம் நாரணமே"

என்ற திருப்பாட்டை ஒரு ஓலையிலே எழுதிக்கொடுத்தார். சங்கப் புலவரும் அப்பாடலைக் கொண்டுபோய்ச் சங்கப் புலவர் குழுவிலே படித்துப் பின்பு சங்கப் பலகையில் வைத்தார். சங்கப்பலகையும் அப்பாடலை

ஏற்று மற்றைய புலவர்களுடைய தெளிவில்லாத பாடல்களைக் கீழே தள்ளியது. இவ்விதம் சங்கமேறிப் புகழ்பெற்றதாகவும் நம்மாழ்வாருடைய திருவாய்மொழிக்குப் பெருமை உண்டு.

மதுரகவிகள் நம்மாழ்வாரையே தெய்வமாகக் கொண்டு "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்று தொடங்கிப் பத்துப் பதிகம் பாடித் "தேவு மற்றறியேன்—மேவினேன் அவன்பொன்னடி மெய்ம்மையே" என்று நம்மாழ்வார் திருவடிகளையே நினைந்து, அவர் தம் பாடல்களே உலகத்தார்க்கு உய்யும் வழி என்று உபதேசித்துப் போந்தருளினர். இராமாநுசருடைய முக்கிய சீடர்களான கூரத்தாழ்வானையும், முதலியாண்டானையும் விட இவருடைய குருபக்தி மிகவும் சிறந்தது என்று கூறுவர் பெரியோர். அவர்கள் இருவரும் தம் குருவான இராமாநுசரைக் கண்டபோதெல்லாம் பக்திசெய்து சில வேளைகளில் இராமாநுசரைக் காணாத பொழுது திருவரங்கன் திருத்தாள்களையும் உய்யும்வழியாகக் கருதிப் பக்திசெய்வார்களாம். இம்மதுரகவிகள் அவ்விதமின்றி, எல்லாக்காலங்களிலும் நம்மாழ்வாருடைய திருவடிகளே தஞ்சம் என்று வணங்கி வேறு தெய்வமில்லையென்று வாழ்ந்தவர் என்பது அவருடைய "தேவுமற்றறியேன் குருகூர் நம்பி" என்ற பாடலாலே விளங்குகின்றது. பரதனிடத்தில் சத்துருக்கனனுக்கு இருந்த நிலையையும், இராமாநுசரிடத்தில் வடுக நம்பி என்பவருக்கு இருந்த நிலையையுமே இவருடைய பக்திக்கு ஒப்பிடலாம்.

இவ்விதம் வேதம் தமிழ்செய்த மாறன் பசுந்தமிழை எங்கும் பரப்பித் திருமாலுக்குச் செய்யும் தொண்டைவிடத் திருமால் அடியார்களுக்கு செய்யும் தொண்டே சிறந்தது என்ற உண்மையைத் தம் வாழ்க்கையின் வழியாக விளக்கிக் காட்டியருளினர்.

"இதுவோ திருநகரி ஈதோ பொருநல்
இதுவோ பரமபதத்து எல்லை!—இதுவோதான்
வேதம் தமிழ் செய்து மெய்ப்பொருட்கு; முப்பொருளால்
ஓதும் சடகோபன் ஊர்"

என்கிற பாட்டில் இவருடைய தமிழ் தழுவிய பக்தியுள்ளம் பதிந்தது.

மதுரகவி ஆழ்வாருடைய பிறந்தநாளைக் கொண்டாடிப் பாடிய பொய்யில்லாத மணவாளமாமுனிகளின் திருவாக்கோடு இதனை முடிப்போம்.

ஏரார் மதுரகவி யிவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையிற் சித்திரை நாள்—பாருலகில்
மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாள்களினும்
உற்றதெமக் கென்றுநெஞ்சே யோர்.

——:():——

பாடம் 1 வினாவிடை சந்தா எண்...........

[இந்த இதழிலுள்ள கட்டுரைகளிலிருந்துதான் வினாக்கள் கேட்கப்பட்டிருக்கின்றன. வினாக்களுக்குக் கீழே உள்ள இடத்தில் விடைகளைச் சுருக்கமாக எழுதவேண்டும். சொந்தக் கையெழுத்திலிருக்கவேண்டும். ஆண்டு இறுதியில் பரிசுகள் வழங்கப்பெறும்.]

(மதிப்பெண் 100)

1. இந்து சமயம் என்றால் என்ன?

2. சைவ சமயம் பற்றி டாக்டர் ஜி. யூ. போப் என்ன கூறினார்?

3. உலகாயதம் என்றால் என்ன?

4. 'அப்பன் நீ' என்று தொடங்கும் பாடலில் கண்ட உண்மையாது?

5. மயிலாப்பூர் என்ற பெயர் வரக்காரணம் என்ன?

6. மயிலாப்பூரில் பிறந்த சான்றோர்களைக் கூறுக?

7. மயிலையிலுள்ள வேறு கோயில்கள் எவை?

8. விநாயகர் உருவம் எப்படி அமைந்திருக்கிறது?

9. விநாயகர் வழிபாடு எங்கெல்லாம் பரவியிருக்கிறது?

10. மிகப்பெரிய யானைமுகனுக்கு மிகச்சிறிய பெருச்சாளி வாகனமாக இருப்பதற்கு விளக்கம் என்ன?

11. பூசலார் நாயனுர் எந்த ஊர் ? எங்கே கோயில் கட்டினுர் ?

12. காடவர்கோன் கனவில் கண்டது என்ன ?

13. பூசலார் வரலாற்ருல் தெரிந்து கொள்ளும் உண்மை என்ன ?

14. ஓசைக்கும் ஒலிக்கும் என்ன வேறுபாடு ?

15. மக்களை மாக்களினின்றும் பிரிப்பது எது ? ஏன் ?

16. அன்பு, அறிவு இவற்றை எப்படி அளந்தறிவது ?

17. மதுரகவி ஆழ்வாருக்கும் மற்ற ஆழ்வார்களுக்கும் உள்ள வேறு பாடு யாது ?

18. மதுரகவியாழ்வார் வரலாற்றிலிருந்து அறிந்து கொள்ளப் பெறும் உண்மை என்ன ?

கையெழுத்து.............................................

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இதழிலுள்ள விஞப்பகுதி ஏடுகளைக் கோடிட்ட இடத்தில் கிழித்து, விடைகளை எழுதி, உறையிலிட்டு, அகதி அஞ்சல் தலையுள்பட 25 பைசா அஞ்சல் தலைகளை ஒட்டி, கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்பவேண்டும்.

---

" அருளோசை "
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை-18



# திருமயிலை கபாலீச்சரர் ஆலயம்

## கருங்கல் தளவரிசை திருப்பணி நிதி உதவ வேண்டுகோள்

தொண்டை நாட்டுத் திருப்பதியாகிய திருமயிலைக் கபாலீச்சரம் மிகத் தொன்மை வாய்ந்த சிவத்தலம். நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் என்பை எழிலுருக் கொண்ட ஏந்திழையாகச் செய்த அற்புதத் திருத்தலம். அருணகிரியாரால் பாடப்பெற்ற சிங்கார வேலர் கோயில் கொண்டுள்ள திருத்தலமும் இதுவே! அம்பிகை மயிலுருவில் வழிபட்ட அரிய திருத்தலம். அப்பரால் பாடப் பெற்ற அழகொழுகும் ஆலயம். இத்துணை புகழ் மலிந்த மயிலையம் பதியில் உள்ள கற்ருர்கள் ஏத்தும் கபாலீச்சரர் ஆலயப் பிரகார கருங்கல் தளவரிசை அமைக்கும் திருப்பணி நடைபெற்று வருகிறது.

நன்கொடை வழங்குபவர்கள், நிர்வாக அதிகாரி, திரு கபாலீச்சரர் ஆலயம், மயிலாப்பூர் சென்னை-4, என்னும் முகவரிக்கு அனுப்பி திரு கற்பகாம்பாள் உடனுறை கபாலீசுவரரின் திருவருள் பெற்று வாழ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

சி. செல்வநடராஜ முதலியார்,
டி. பாலகிருஷ்ணன்,
ஆர். கோதண்டராமன்,
எஸ். ஜெயராமன்.
அறங்காவலர்கள்

கு. அய்யா சுப்ரமண்ய முதலியார்
தலைமை அறங்காவலர்.

த. நாகராஜன், பி. எஸ். ஸி.,
நிர்வாக அதிகாரி

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9. Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-18.